ஞாயிறு வெளியீடு. விலை 0-1-3. REGD. NO. M. 4455

விளம்பர விகிதம்.
இஞ்சு ஒன்றுக்கு 1-0 0.
சர்க்கார் கோர்ட்டு 2-0-0

# திராவிடநாடு

வருடசந்தா ரூ. 5—0—0
ஆறுமாதம் ரூ. 2—8—0
தனிப்பிரதி ரூ. 0—1—3

மலர் 3 | காஞ்சிபுரம் 5—3—44 | இதழ் 1.

நாடக மாநாட்டில்

## நகைச்சுவை மன்னர்!

D. V நாராயணசாமி.

என்ன செய்தார்? தானும் ஓர் பெரிய மனிதன் என்ற அளவில் வந்துவிட்டுச் சென்றாரா? அல்லது அந்தக்கற்பனைக் கனியும், இதயத்திலே குவிந்துகிடந்ததை, உள்ளுணர்ச்சிகளைச் சொற்பெருக்கிலே சிந்தினாரா? என்பது அன்று வந்தவர்க்கே தெரியும். தன்மானஉலகின் தலைநகர் அன்றையதினம் தனிச்சிறப்புடன் திகழ்ந்தது. மக்கள் நலத்திலே நாட்டங்கொண்டு அவ்வப்போது அரிய தன்மானச் செயல்களின் மூலம், தனதுகூரிய மதியைத் தமிழருக்குப் பயன்படுத்தும் முத்தமிழ் நுகர்வோர் கழகத்தலைவர் தோழர் P. சண்முகவேலாயுதம் அவர்களின் தக்க முயற்சியால் ஆங்காங்கு பற்பல ஊர்களில் சிந்திக்கிடக்கும் தன்மான மணிகள் நூற்றுக் கணக்காக, அணி அணியாக அன்று காட்சியளித்தது அம்மாநாட்டிற்கு, அணிகலன்பல செய்தது போன்றிருந்தது எனில் மிகையொன்றுமில்லை. நாடகக்கலை அபிவிருத்திமாநாடு நாட்டுமக்களுக்குஎன்னசெய்யப்போகின்றது என்பதிலே நாட்டமுடன் இருந்தனர்குழுமியிருந்த பெரும்பான்மையோர். காலைநிகழ்ச்சியிலே, ஓர்காரமான செய்தியைக்கேட்டு மக்களில் பலருக்கு அதற்குத்தக்க பரிகாரம் தேடப்படல் வேண்டுமேஎனத் தீவிரநோக்கங் கொண்டனர். என்ன அந்தகையசேதி? நாடகமாநாட்டிற்குத்தலைமைவகித்தநமதுசர். ஆர். கே. சண்முகம் அவர்கள் செய்தசொற்பொழிவின் ஓர்பகுதியே காரஉணர்ச்சியைக் கலாரசிகர்களிடம் ஏற்படுத்திவிட்டது. காரம் சாப்பிட்டவாய் இனியபானத்தை தேடுவது இயல்புதானே. அதுபோல், மூடநம்பிக்கைகளுக்கு நிலைக்களனாக, பொக்கிஷமாகவிளங்கும் கம்ப இராமாயணம் முதலிய நூல்களை, தங்கள்வெறுப்பைக் காட்டுவதற்காக மக்களிடையே மனமாறுதலை ஏற்படுத்துவதற்காக கொளுத்தவேண்டுமெனக் கூறினது தவறென்று மக்கள் உணரவேண்டுமென கருதிக், கொளுத்துவதுகூடாது என்பதனைச்சாடையாகவலியுறுத்திச் சர். சண்முகவள்ளல் பேசிவிடவே, மக்கள் தோழர் அண்ணாத்துரை அவர்களின் சொற்பொழிவைக்கேட்டு இனிய உணர்ச்சிபெற ஒவ்வொரு, நிமிடமும், எதிர்நோக்கி இருந்தனர். இந்நிலையிலே தான் நகைச்சுவை மன்னர் தமதுபங்கு இன்னதெனத்தெற்றெனத் திராவிடஉலகத்திற்குக்காட்டினர். மாநாட்டை, வெற்றிப் பாதையிலே வெகுவிரைவாகச் செலுத்திய தனிப்பெருமை, நகைச்சுவை மன்னனுக்கே என்று அன்றுகூடியிருந்த பலர் கூறினமொழியேயன்றி, நாம் கூறுவதல்ல. தனவந்தர்கள் தாட்சணியத்தினாலும், தரித்திரர்கள், தன்பயத்தாலும் பேசத்துணியாத-சொல்லத்துணியாத கருத்துகளையும் நிகழ்ச்சிகளையும் உணர்ச்சிகளையும் உள்ளடக்கிய ஓர் ஒப்பற்ற சொற்பொழிவை நிகழ்த்தி மக்களிடையே ஓர்கலகலப்பைஉண்டு பண்ணிவிட்டார்கள் என்பதுமட்டுமல்ல சிரித்துக்கொண்டிருந்த மக்களுக்குச் சிந்தனை உணர்ச்சியையும் தந்துவிட்டார்.

நாடகக்கலை உண்மையிலேயே முன்னேறவேண்டுமானால், அபிவிருத்தி அடையவேண்டுமானால், கலைக்கு உயிரளிக்கும், நடிகர்களுக்கு, நல்லசம்பளம் தரவேண்டும், ஒரு நடிகன் நாடகக்கம்பெனியைவிட்டுச்செல்லும்போது அவன் கையில் நூறுரூபாயாவது இருக்கவேண்டும். இல்லையேல் வற்புறுத்தி நூறுரூபாயாவது தந்தனுப்பவேண்டும் எனஆக்ரோஷங்கலந்த தெளிவான அச்சமற்றகுரலிலே, அவர் எடுத்துக்கூறியது சிந்தனைக்குரியதாகவே இருந்தது. பிள்ளைப்பிராயத்திலே நாடகக்குழுவிலே சேர்ந்துஇந்நாளில், விஞ்ஞானக்கலையாம் சினிமாவில், நட்சத்திரமாகத்திகழும் கிருஷ்ணன் அவர்கள் கூறியகருத்து நகைச்சுவையின்பொருட்டுஎனயாராவது நினைத்தால், நிச்சயம் ஏமாற்றமே. பாலயப்பருவத்திலே, நாடகக்குழுவிலே சேர்ந்துபல ஆண்டுகள்உழைத்தும் உடல் நலங்கெட்டு வெளியேறும் நடிகர்களின் வெறுங்கைநிலையைப்,பாரிதன்மையை பட்டப்பகலில் படம்பிடித்துக்காட்டியது போன்றில்லையா? நகைச்சுவை அரசரின், பொன்வாய்மொழி. அத்தோடு நின்றாரில்லை, தமிழ்நாட்டில், நாடகத்தால் பயனடையும், சம்பாதிக்கும், முதலாளிகளைநோக்கி மாதம் முப்பது நாடகம் நடத்துகிறீர்களே! அதிலே ஒருநாள் வசூலை நடிகர்கள் நிதிக்குக்கொடுத்தாலென்ன? என்றுகேட்டார். இந்தக்கேள்விக்கும், நாடகக்கலைக்கும் என்ன சம்பந்தம் என்று யாராவது கேட்கத்துணிவார்களாயின், அவர்கள், மாண்டுபோனசகாப்தத்தின், நூற்றாண்டின், பிரதிநிதிகளே என்று, கூறயாருக்கும் தயக்கம்வேண்டியதில்லை. கலை வளரவேண்டுமாயின், கலைக்கு முதுகெலும்பு போன்ற கலைஞன் வாழவேண்டும்-வளரவேண்டும் என்பதையே மேற்குறித்த, ஒருநாள் வசூல் எனும் வாசகம் சுட்டிக்காட்டுகிறது என்பதை ஒப்புக்கொள்ளாதவர்கள் உண்மை உணர்ந்தவர்களல்ல. பரிசுதரும் மகாஜனங்களே! நாடகத்தைப்பார்த்து நன்றாக நடிக்கும்-உங்களுக்குப்பிடித்தநடிகருக்குச், சன்மானங்கள் தாருங்கள், முதல்போட்டு மேலும் முதல் சேர்க்க விரும்பும் முதலாளிகளுக்குக் கொடுக்காதீர்கள் என்று பச்சையாக, எளியதமிழில், தாட்சணியத்தன்மைக்குச் சாவுமணியடித்துவிட்டு, அன்று என். எஸ். கே. கூறியதை ஆமோதிக்காத மக்களுக்கு, அங்குசெல்வாக்கு இல்லை. கலைக்குத்தூண்களாக,கண்களாக, இருக்கும்நடிகர்களின், உழைப்பின் பயன்நேரடியாக, அவர்கட்குச் சேரவேண்டுமென்பதிலே இன்று கருத்துபேதம், இருப்பினும் காலவேகத்தில் அக்கருத்துபேதம், செத்து ஒழியாமல் இருக்கப்போவதில்லை, என்பதனைச் சித்தரித்துக் காட்டியது, நகைச்சுவை மன்னரின், தெளிவான கருத்து. மேலும் பகுத்தறிவுக்கேற்ற சிறுஉதாரணங்கள், நிகழ்ச்சிகள், கதைகள், முதலியவற்றையும் தமது சொற்பொழிவிலேயே திணித்து, நெஞ்சில்உற்றது செய்கையில் நாட்டுதல் என்னும் புரட்சிக்கவி, கனகசுப்புரத்தினம் (பாரதிதாசன்) அவர்களின் கருத்துள்ள கவிக்கு நகைச்சுவை மன்னர் இலக்கியமாக விளங்கியதுகண்டு பூரிக்காத தமிழ்மகன்இல்லை, சிந்தைகுளிராத தன்மானவாதியும் இல்லை. மாநாடு கூட்டியவர்கள் எந்தநோக்கத்தின் அடிப்படையில் கூட்டியிருந்தாலும் சரி, அன்று, இருபெரும்உண்மைகள் விளக்கப்பட்டன. ஒன்று, கலைவளர, கலைஞன்வளர

(6ம் பக்கம் பார்க்க)

# குடந்தை, மாவட்ட திராவிட மாணவர் மாநாட்டுத் திறப்புரை.

★

கரந்தைப் புலவர் கல்லூரி விரிவுரையாளரும், கரந்தைத்தமிழ்ச்சங்கத் திங்கள் வெளியீடான "தமிழ்ப்பொழில்" ஆசிரியருமாகிய வித்துவான் சோ. சி. பெரியசாமிப்புலவரவர்கள் குடந்தையில் நிகழ்ந்த "மாவட்டத் திராவிட மாணவர் மாநாட்டைத் திறந்துவைத்து நிகழ்த்திய சொற்பொழிவு.

அன்பார்ந்த மாணவர்களாகிய தோழர்களே! இங்குகுழுமியுள்ள பெரியோர்களே! தாய்மார்களே! வரவேற்புக் கழகத் தலைவராய நண்பர் தவமணியரசு அவர்களே! உங்கள் யாவருக்கும் எளியேனின் வணக்கம் பல உரியவாகுக,

யான் கரந்தைப் புலவர் கல்லூரி விரிவுரையாளராகவும், கரந்தைத் தமிழ்ச்சங்கத்தினின்றும் வெளிவரும் செந்தமிழ்த் திங்கள் வெளியீடாகிய "தமிழ்ப்பொழில்" ஆசிரியனுகவும் பணிபுரிந்து வருகின்றேன், எனும் காரணத்தாலோ, வேறு காரணத்தாலோ இம்மாணவர் மாநாட்டின் திறப்புவிழா வாற்றும் பணியை இம்மாநாட்டார் எனக்கு அளித்துள்ளனர். யானும் மாணவர்களோடு நாளும் நெருங்கிப் பழகுகின்றேனுகையால் மாணவர்கள் அழைப்பினை மறுத்துரையாது ஏற்றுக்கொண்டு இத்திறப்புவிழா வாற்ற உடன்பட்டு இவண்போந்து உங்கள் முன் நிற்கிறேன். திறப்புவிழா வாற்று முகத்தான் மாணவர்கட்கு வழிகாட்டும் சீரிய உரைகளை வழங்கி, அவர் தம்மை நற்பணியாற்றப் பொற்புற ஊக்குவோர் அறிவிற் சிறந்தோராயும், உணர்ச்சியை எழுப்ப வல்ல உரன் படைத்தோராயும் இருத்தல் வேண்டுமென்பதை யான் அறிவேன். அறிவும், அறிவால் எழும் உணர்ச்சியும் ஒன்றித்து உருப்பெற்ற உணர்வுடையோரே இத்தகுபணி செய்தற்குத் தகுதியுடையோராவர், இத்தகைப் பண்புகள் என்பால் உளவோ, இலையோ யான் அறியேனுயினும், இவ்வாற்றறும், உணர்ச்சியும் இம்மாணவ மாநாட்டாரிடம் உள என்பதனைச் "சண்டே அப்ஸர்வர்" (Sunday Observer) எனும் நமது இயக்கச் செய்தித்தாளால் அறிந்தேன். ஆரிய மாணவரொருவர் இம்மாநாட்டுக் கழகத்தில் இடம்பெற விரும்பித்தன்னையும், இக்கழக உறுப்பினருள் ஒருவராகச் சேர்த்துக்கொள்ள வேண்டுமெனக்கேட்டபோது இம்மாணவர் கழத்தினர் உறுதியாக இடந்தர இயலாதென மறுத்துக் கூறிவிட்டனர். அப்பார்ப்பன மாணவர், சண்டே அப்சர்வர் (Sunday Observer) ஆசிரியருக்குத் தன்னை மாணவர் கழகத்தார் புறக்கணித்தமை ஏற்புடையதாகாதெனக் கூறி முடங்கல் வரைந்தனுப்பினர். அவர் வரைந்த அம்முடங்கலேயும், தமது கருத்தினையும் அவ்வாசிரியர் வெளியிட்டுள்ள பெற்றியைக்கண்டேன். இத்தகுஉணர்ச்சி மிக்க திராவிடமாணவர் மாநாட்டைத் திறந்து வைக்கும்பணியினும் சிறந்தபணி என் வாழ்நாளில் கிடைக்காதென்னும் துணிபு கொண்டேன். அவ்உணர்ச்சியுருவாய இம்மாணவர் மாநாட்டை உவகையுடன் திறந்துவைக்க ஒருப்பட்டேன். இத்திறப்பு விழாவாற்றும் பணியை எனக்கு அளித்துச் சிறப்பித்த இம்மாவட்ட மாணவர்கட்கு என்நன்றியறிவோடியைந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

மாணவர் மாநாட்டில் அரசியலைக் கலந்துபேசக் கூடாதெனச்சிலர் கூறினுர்கள் என்றுஇத்திறப்புவிழாவாற்றஎன்னை அழைத்த நண்பர்கள் என்னிடம் கூறினுர்கள். திருவையாற்று அரசர் கல்லூரியில் பார்ப்பனர், பார்ப்பனரல்லாதாராகிய மாணவர்கள் யாவரும் வேறுபாடு கருதாமல் உடனிருந்து உண்ணவேண்டுமெனத் தஞ்சை மாவட்ட நாட்டாண்மைக்கழகத்தார் முடிபு செய்தனர். இம்முடிபு ஆட்சிக்கு வருவதற்குள் வழக்குரைஞராகிய T. R. வெங்கடராய சாத்திரி முதலியோரும், இந்துமகாசபை அமைச்சராய திவான் பகதூர்K. S. இராமசாமி சாத்திரிமுதலியோரும், சகத்துக்குருவெனும் சங்கராச்சாரியரும், மற்றும்காப்பிக் கடைப் பார்ப்பனர்முதல் காவேரிக்கரையில்தர்ப்பைப்புல்லால்ஆட்சிபுரியும் பார்ப்பனர்ஈருக உள்ள எல்லாப் பார்ப்பனரும் ஒன்ருய் இயைந்து நாட்டாண்மைக் கழகத்தார் செயல் நாட்டிற்குக் கேட்டை விளைவிக்குமெனக் கூச்சலிட்டனரே அவர்கள்கூறிய போலியுரைகளை இந்நாட்டில் பார்ப்பனர்களால் வெளியிடப் பெறும் "நாட்டாள்" களும் "கிழமைத்தாள்" களும் தாங்கி வெளிவந்தனவே, இவையாவும் மாணவர்களுக்குச் சாதியுணர்ச்சியையும் அரசியற் பிரிவினையையும் ஊட்டும் செயலல்லவா? (ஆம்! ஆம்! என்னும் ஒலி) இச்செயல் புரிந்தோர் அன்று தம்பக்கல் இச்செயற்குக் கருவியாகப் பார்ப்பன மாணவர்களைக் கூட்டிக்கொள்ளவில்லையா? பார்ப்பன மாணவரும் அவருடன் ஒத்துழைக்கவில்லையா? இப்பொழுது உபதேசம் செய்கின்ற மகான்கள் அப்பொழுது எங்குபோய் ஒளித்தனர்? (வெட்கம் வெட்கம் எனும் ஒலி) அண்ணமலைப் பல்கலைக் கழகத்தில் பார்ப்பனரல்லாதாராகிய சர். K.V.ரெட்டிநாயுடு துணை வேந்தராயமைந்தமை பொருக்காத பார்ப்பனர்கள் சர். K.V. நாயுடுவுக்கு எதிராகப் பார்ப்பன மாணவர்களை இயக்கக்கிளர்ச்சி புரியச்செய்தனரே அதுபோது இன்று அறிவுரை புகலும் ஆசிரியர்களும், அரசியல் வாதிகளும் என்னசெய்து கொண்டிருந்தனர்? (அப்படிக் கேளுங்கள் என்ற ஒலி)

காங்கிரஸ் தான் நாட்டிற்கு விடுதலையைத் தேடித்தரும் நாடு விடுதலை அடைந்தபின்னர் நீங்கள் தான், இந்நாட்டு மன்னராவீர்கள்; நீங்கள் இந்நாட்டு வைஸ்ராய்—கவர்னராவீர்களென மாணவர்கட்கு ஆசையுரைகூறி மாணவர்களைச் சட்டவரம்பைக் கடக்கச்செய்து காங்கிரஸ் காரர்கள் தங்கள் கட்சிக்கு ஆக்கந் தேட முயன்றனரே, அதுபோது இவர்கள் அறிவு எங்குபோயிற்று? (கேளுங்கள் கேளுங்கள் என்னும் ஒலி) இன்று திராவிட மாணவர்கள் இனப்பற்றுடன் மாநாடு நடத்த முயன்ருல் இவர்கட்கு மாத்திரம் உபதேசமா?

அன்பர்களே! திராவிட மாணவர்களாகியநீங்கள் எக்காரணம்கொண்டும் சட்டவரம்புகடந்த செயலுக்குடன்படல் கூடாதென, அறிவிக்கிறேன். இவ்வறிவிப்பினை நன்கு உளத்துட்கொண்டு நீங்கள் ஒழுக வேண்டுமென வேண்டுகிறேன். சட்டவரம்புகடந்து செயல்புரியுங்கள் எனத் திராவிட மாணவர்களைத் தூண்டிவிட்டுச்செயல்புரியவைத்துப் பார்ப்பன மாணவர்கள் சட்டத்துக்குஅடங்கிநடந்து கொள்வார்கள். சான்ருகத் திருவையாற்று அரசர்கல்லூரியைஎடுத்துக்கொள்ளுங்கள். அரசர்கல்லூரியின் மேற்கூரை நெருப்புப் பிடித்துக்கொண்டது; கூரையில் நெருப்புவைத்தவன் பார்ப்பனமாணவனே? அல்லாதானே? யாமறியோம், ஆனுல் அரசாங்கநடவடிக்கைகளில் அகப்பட்டுக்கொண்டு அல்லலுற்றுத் தம்படிப்பையும் கெடுத்துக்கொண்டு மிகுதியாகச் சிறைசென்ற மாணவர்கள் பார்ப்பனரல்லாதமாணவர்களே. இவற்றையெல்லாம் எண்ணிப்பார்த்து நம்திராவிட மாணவர்கள் அரசாங்கச் சட்டங்கட்குஅடங்கியொழுகித்தம்முடைய செயல்களில் வெற்றி காணவேண்டுமெனவேண்டிக் கொள்ளுகின்றேன். நம்திராவிட மாணவர்கள் இயக்கஉணர்ச்சிகாரணமாகத் தம் படிப்பிற்குக் கேடுவிளைவித்துக்கொள்ளக் கூடாது. பார்ப்பனரோ நூற்றுக்குத்தொண்ணூற்ருென்பதின்மர் உயர்தரக் கல்வி பெற்றுள்ளனர்ஒற்றுமையாகவும்செயல்புரிகின்றனர். அரசியல்பதவிகளையும்அடைந்துள்ளனர். நம்திராவிடரோ நூற்றுக்குப் பதின்மர்கூடப்படிப்பறியாதவர்கள், ஒற்றுமையில்லாதவர்கள். படிப்பும், ஒற்றுமையும் பதவியுமுடைய ஒரு கூட்டத்துடன், ஒருமைப்பாடும், படிப்பும் இல்லாதஒருகூட்டத்தினர் போட்டியிட்டால் எவ்வாறு வெற்றிபெறஇயலும். என்பதை யெண்ணிப்பாருங்கள். திராவிடம் செய்ததவத்தால் "Dr. நாயர்," "தியாகராயர்," "பனகல் அரசர்," முதலிய பெரியோர்கள் தோன்றினுர்கள். நீதிக்கட்சியை நாட்டினுர்கள். சிறந்தபணி

(6ம்பக்கம் பார்க்க.)



# சென்னையில் 'சந்திரோதயம்'

## நகைச்சுவை அரசர் நன்கொடை ரூபா 500.

### "திராவிடநாடு" வளர்ச்சிக்கு ரூபா 2010.

சென்னை V. P. ஹாலில், 27-2-44 மாலை 5-30 மணிக்குச் "சந்திரோதயம்" விமரிசையாக ஆரம்பமாயிற்று. நாடகத்திற்கு, தாய்மார்களும் பெரியோர்களும், வீறுகொண்ட வாலிபர்களும், கலாவாணர்களுமாக ஏராளமானவர்கள் கூடினர். மாலை 3-மணியிலிருந்தே கொட்டகை, இயக்கத்தோழர்களின் இருப்பிடமாகிவிட்டது! திருச்சி, பொன்மலை, கரூர், புதுச்சேரி, குடந்தை, வடாற்காடு, முதலிய பல வட்டாரத்தோழர்கள் வந்திருந்தனர். நமது தளபதி தோழர் T. சண்முகம் அவர்கள், தோழர்களை வரவேற்றுபசரித்தார்.

நாடகம் துவக்கப்படுமுன்பு, நகைச்சுவைமன்னர் N. S. கிருஷ்ணன் அவர்கள், உள்ளே நுழைந்தார், களிப்புகொட்டகையைத் தாக்கலாயிற்று!! நகைச்சுவை அரசரைக்கண்டதும், மலராத முகமில்லை, வாழ்த்தாத வாயில்லை, கரகோஷமிடாக் கரமில்லை!! உடுமலை நாராயணக்கவி, டைரக்டர் மணி, T. K. பகவதி, K. R. இராமசாமி, இராமச்சந்திரன், T. P. பொன்னுச்சாமி, கார்மேகம், K. C. துரைக்கண்ணு, ஆகியபல சினிமாநாடக நடிகர்கள் பலர் குழுமியிருந்தனர். சென்னை வதியும் செந்தமிழ்த் தலைவர்கள் பலரும் ஆங்குவந்திருந்தனர். மாஜிமந்திரியார் தோழர் S. முத்தைய முதலியார் நெடும்பலம், N. R. சாமியப்ப முதலியார், செங்கற்பட்டுஜில்லாபோர்டுதலைவர் கயப்பாக்கம் குறுநிலமன்னர் முத்துலிங்கர், ராவ்சாகிப் பாலசுப்பிரமணிய முதலியார் (சிறைச்சாலை சூப்பரண்டெண்டெண்டு), ராவ்சாகிப் ஆல்பர்ட் ஜேசுதாசன், N. சங்கரன், பாரிஸ்டர் V. L. எதிராஜ், ராவ்சாகிப் T. S. நடராசப்பிள்ளை, N.R.S. இராமலிங்கம், ஜுபிடர் பிக்சர்ஸ் சோமசுந்தரம், S. K. மொஹைதீன், A. பொன்னம்பலனுர், குருசாமி, குஞ்சிதம், இந்திராணிபாலசுப்பிரமணியம் அம்மையார், டாக்டர் தர்மாம்பாளம்மையார், தேவசேனு அம்மையார் ஆகியோரும் மற்றும்பலரும் வந்திருந்தனர்.

நாடகம் 9-30 மணிவரை நடைபெற்றது. முடிவில் தோழர் N. S. கிருஷ்ணன் அவர்கள், நாடகப் போக்கையும், நடிகர்களையும் பாராட்டிப் பேசிவிட்டுத், திராவிடநாடு பத்திரிகைக்கு 500 ரூபாய் நன்கொடை தந்ததுடன், நாடகத்திலே நடனமாடிய பேபி ரஷியா (குருசாமி-குஞ்சிதம் அவர்கள் திருக்குமாரி) வுக்குப் பரிசாக ரூபா 100 அளித்தார். தோழர் அண்ணுத்துரை, வந்தனங்கூறினுர். டாக்டர் தர்மாம்பாள்ம்மையார், தாய்மார்கள் சார்பாக, அண்ணுத்துரைக்குச் சரிகை மாலைபரிசளித்தார்கள். T. K. சகோதரர்களின் M. S. B. S. சபையிலிருந்து விலகிய நடிகத் தோழர் D. V. நாராயணசாமி அவர்கள் புராணநாடகக் குழுவிலிருந்து வெளிப்பட்டதை எடுத்துரைத்து, சீர்திருத்தநாடகக் கலையின் மேம்பாட்டுக்காகத்தனது பணி இனிப்பயன்படுமென்றுரைத்து, இதனைத் தொழில்முறையிலே அமைக்கும் சமயம், நகைச்சுவை அரசர் தக்க ஆதரவுதரவேண்டுமென்று கேட்டுக் கொண்டார்.

நாடகத்தை வெற்றிகரமாக நடத்திக் கொடுக்க, நண்பர் K. A. P. சாமி அவர்கள் பலநாட்களாக முயற்சிஎடுத்துக் கொண்டதைப் பாராட்டுகிறோம். அவருடைய ஆர்வமும், அவருடன் பணியாற்றிய தோழர் நமச்சிவாயம் போன்ருரின் ஒத்துழைப்பும், நாடகத்தைச் சிறப்புற நடத்த உதவின. பெத்துநாயக்கன் பேட்டைத் தோழர்களின் பேருதவி நாடக அமைப்பாளர்களுக்கு இருந்ததுடன், நடிகர் கழகத்தினருக்கும் நற்பயன் அளித்தது. சென்னை நகரிலே, திராவிடஇன உணர்ச்சியின் ஊற்ருக விளங்கிவரும், தளபதி T.சண்முகம்அவர்களின் பேருக்கமும், உதவியும் அளவிடற்கரியது. திராவிடநாடு பத்திரிகைக்கு நன்கொடை வசூலிக்கவும், நாடகத்தைச் சிறப்புறநடத்தவும், அன்பர் சண்முகம் அரும்பாடுபட்டது, அகமகிழ்ச்சி தருவதுடன், அன்னுர் போன்ருர் இருக்கும்போது அஞ்சாதே மனமே! என்று, திராவிடவாலிபர் மனதுக்கு உற்சாகமூட்டுகிறது.

நண்பர் N. S. கிருஷ்ணன் அவர்கள் திராவிடநாடு பத்திரிகைக்கு 500 ரூபாய் நன்கொடை தந்ததன்றிச் சென்னைச் செங்கற்பட்டு வட்டார இயக்க அன்பர்கள் அளித்த நன்கொடைத்தொகை 744 ரூபாய், டிக்கட் விற்பனைத் தொகை 1716 ரூபாய். சீன், டிரஸ், மேக்கப், நடிகர் வழிச்செலவு, சாப்பாட்டுச்செலவு, விளம்பரம், தமாஷாவரி, முதலியனவற்றுக்காகச் செலவானது 775—0—7. இத்துடன், நடிகர் கழகத்தார் செய்த செலவுவகையில் 200 ரூபாய், ஆகமொத்தச்செலவு 975—0—7 போக, திராவிடநாடுபத்திரிகை வளர்ச்சிக்காக கிடைத்த தொகை 2010 ரூபாய் (N. S. K. நன்கொடையுடன் கூட்டியது) ஆகும்.

## பெரியார் வாழ்த்து.

19, 20, பிப்ரவரியில், குடந்தையில் கூடிய திராவிடமாணவர் மாநாட்டுக்குப் பெரியார் அனுப்பிய வாழ்த்துச்செய்தி.

அன்புள்ள தவமணிஇராசன் அவர்களுக்கு,

ஈ. வெ. ரா. வணக்கம்.

தங்கள் 16-ந்தேதிக்கடிதமும் அழைப்பும் இன்றுகிடைத்து மிகுதியும் நன்றிசெலுத்துகிறேன்.

தங்கள்அழைப்புக்கு முன்னதாகவே நான்செய்துகொண்ட ஏற்பாட்டின் பயனுய்த்தங்கள்விருப்பப்படி வருவதற்கு இயலாமற்போனதற்கு வருந்துவதுடன், பொறுத்தருளவேண்டுகிறேன்.

தாங்கள் கூட்டிஇருக்கும் மகாநாடு, திராவிட மாணவர்கழகம் மிகவும் அவசியமானது என்பதுடன் திராவிடநாடு முழுவதும் இம்மாதிரி கழகங்களும் மகாநாடுகளும் ஏற்படும்படி செய்யவேண்டியதும் உங்கள்போன்ருரின் கடமையாகும், என்பதை மிகுதியும் பரிவோடு தெரிவித்துக்கொள்ளுகிறேன். சமீபத்தில் வரப்போகும் எப்ரல் லீவுநாட்களில் சில மாணவர்கள் ஒன்றுசேர்ந்து திராவிடநாடு முழுவதும்சுற்றிக் கழகத்தின் இலட்சியத்தைப் பரப்பிப்பிரசாரம்செய்யப்படவேண்டியதும் முக்கியகடமையாகும் என்றுதெரிவித்துக் கொள்கிறேன்.

புதியதிராவிடநாட்டை ஆக்கவும், ஆக்கவேலைசெய்யவும் திராவிடர்களுக்கு இன்று மாணவர்கள்தான் இருக்கின்ருர்கள். மாணவர்களால் ஆனுல் ஆனதுதான்; இல்லாவிட்டால் நம்பஇடமில்லை. பெரியவர்களுக்கு வேறுபலபற்றுகள் கவர்ந்துகொண்டதால் ஒழிவில்லாமல்போய்விட்டது.

மகாநாடு வெற்றியுடன் நடைபெற்று வீரத்துடன் தொண்டாற்றப் பயன்படுமாக.

தங்கள் அன்புள்ள,

ஈ. வே. இராமசாமி.

திராவிட நாடு

காஞ்சி 5—3—44 ஞாயிறு

# மாணவர் மலர்.

இந்த இதழில், குடந்தையில் நடைபெற்றதிராவிடமாணவர் மாநாட்டுச்சிறப்புரைகள் ஓரளவுவெளிவந்துள்ளன. அடுத்த இதழில், மற்றுமுள்ள பகுதிகள் வெளிவரும். வேறுபல, அரசியல், உலக இயல் விஷயங்களையும் நிறுத்தி, இந்தவிஷயமாகவே, அதிகமாக வெளியிடுவதற்காக, வாசகர்கள்பொறுத்தருள வேண்டுமெனக் கேட்டுக்கொள்வதற்குப் பதிலாக பூரிப்படைவார்கள் என்றநம்பிக்கையைத் தெரிவித்துக்கொள்கிறோம். மாணவ உலகின் மனப்பாங்கு, காலக்கண்ணடி, இன எழுச்சியின் எழில்மிகு சித்திரம், உரிமைப்போர் முரசொலி, விடுதலை விருந்தம், என்பதுபற்றி, எவரே அறியாதார்! வாழ்க்கை எனும் பொய்கையிலே, ஆரிய நச்சு கலக்கப்படாதபருவம், பகுத்தறிவு எனும் பகலவன் ஒளிபட்டு, விஷக்கிருமிகளை ஒழித்திடும் பருவம், குடும்பம் எனும் கோல்கொண்டுதுழாவி, சேற்றை மேலுக்குத்தள்ளி, நீரைப்பாழாக்காப்பருவம், சுயநலமும் சுகபோகப்பித்தும் எருமை எனப்புகுந்து இருதயகமலத்தைத் துவைத்துப்பாழ்செய்யாப்பருவம். சந்தனக்காட்டைக்கடந்து, மணமும்குளிர்ச்சியும்மருவி, மக்களை மகிழ்விக்கும்தென்றல் போல, சுருதியும் தாளமும் அமைந்து, சொற்சுவையும் பொருட்சுவையும் இழைந்து கேட்போருக்குக் களிப்பூட்டுவதோடு கருத்தூட்டும் இசைபோல, உள்ளது, மாணவப்பருவம். எடுகளிலே நாடு பலகண்டு, வீடுபெறக்காடு செலும்வீணர்போலன்றி, பிறந்தவீடாம் தமிழகத்தின் தனிப்பண்பு தெரிந்து, மகிழ்ந்து, உலகுக்கு அதனை உரைத்து உவகைமிகுந்து, "தாயின்மேல்ஆணை, தந்தைமேல்ஆணை தமிழகமேல் ஆணை, தூய என் தமிழ்மேல் ஆணையிட்டே நான், தோழரே உரைக்கின்றேன்" என்று உள்ளத்திலே ஊறிடும் உணர்ச்சியினை அறிவிக்கும் ஆற்றல்மிக்கது, மாணவப்பருவம்.

மாயாவாதமும் மனமருட்சியும், நெருங்காடுங்கும் நிலஅது! புராணமும் புல்லர் மொழியும் புகப்பயப்படும் அகம் அது! பதவியும் படாடோபமும், பத்து காதத்திலிற்கும், அந்தப் பண்பிலே திளைத்து, அன்பிலே மிகுந்து, ஆர்வத்திலேகுளித்து, ஆற்றலிலேசிறந்து, காணக் காட்சியாய், கேட்கக்கீதமாய், விளங்கும் வாலிப வீரர்கள்முன்பு! வெட்டிப் பேச்சைத்தட்டிநடக்கும்தீரர்கள், கைகொட்டி நகைத்து மட்டித்தனத்தைமட்டந்தட்டும் மாவீரர்கள், சுலோகங்களால் சுகவாழ்வு நடத்தும் சுயநலமிகளைச் "சுருட்டிக்கொள் உன் சூதை" என்றுரைக்கும் சூரர்கள், மாணவர்கள். அடிமைத்தனம், இருத்தலைக்கண்டால் அவர்களின் விழி கனலக்கும், மொழிவீரத்தைப் பொழியும், உள்ளம் ஓராயிரம் எண்ணங்களை வெளியேதள்ளும், உணர்ச்சியின் உருவமாகிவிடுவர், உரிமை உரிமை என்று உரைப்பர், அந்தநடமாடும் எஃகுக் கம்பிகள், நாட்டு விடுதலைப் போருக்கேற்ற நல்லதம்பிகள்! பாடுபட்டுழைத்துப் பலன் காணமக்களைக்கண்டால், கண்களிலே நீர்சோரும், கரங்கள் உதவிசெய்ய முன் வரும், சிரங்கள் சோகத்தால் அசையும், சிந்தனை, சமதர்மத்தில் சென்று பதியும், மாணவர்கட்கு. இத்தகையமாண்புடைய மணிகளே, அறியாமை எனும் அந்தகாரத்தால் சூழப்பட்டுள்ள தமிழகத்திலே தூங்காவிளக்குகள்! மேலுலகத்தார்கள் எனமேனிமெருகு கொடாதவாழவழி செய்துகொண்டு, இனி தவாயாவை எய்த்துப் பிழைக்கும் இனத்தினை இனி ஆதிக்கத்திலிருக்கவிடோம், என இடிமுழக்கம் போல், இயம்பிடும், இடுக்கணுக்கஞ்சா இளஞ்சிங்கங்கள் மாணவர்கள்! இனத்துக்கு, இவர்களே ஈட்டிமுனைகள்! சனாதனத்தை அழிக்கும், சுரங்கவெடிகள்! சாஸ்திரம் எனும் சப்பரைனைத் தகர்த்தெரியும் டார்ப்பிடோக்கள்! வைதீகபுரி மீது பகுத்தறிவுக் குண்டுகளைவீசும் வீர விமானிகள்! சமதர்மபுரிக்கு மக்களை வெற்றிகரமாக அழைத்துச்செல்லும்முன்னணிப்படை! யுகயுகமாகக்கட்டி, அவ்வப்பொழுது பழுதுபார்க்கப்பட்டு பலப் படுத்தப்பட்ட பார்ப்பனீயக் கோட்டைகளைப் படுசூரணமாக்கும் டாங்கிப்படை. ஆம்! மானத்தைமீட்கும்போரிலே, மாணவரன்றி வேறுயார், செயலாற்றும் திறம் படைத்தவர்கள்! அவர்களுக்கன்றிப் பிறருக்கு ஏது, அந்த உரிமை! அவர்களாலன்றி வேறுயாரால் சாதிக்கமுடியும், அந்த மகத்தானவேலையை!! அவர்களையன்றி, வேறுயாரைநம்பி, விடுதலை இயக்கம்துவக்கப்பட்டிருக்கிறது. வீட்டிலுள்ள பேழையிலே விலையுயர்ந்த நவரத்தினத்தைக் குவிக்கவேண்டுமென்று எண்ணுபவர், இதற்கு இலாயக்கா? இல்லையே! வறுமை வளாவளா, இத்தகையோரின் பேழைநிறையும், ஆனல் வறுமை வளா வளா, பேழைகளை உடைத்தெறியும் கோபப்பித்தர் கூட்டமும் வளரும், எனவே, பேழைஉடையோர் கோழையராகி, எந்த நேரத்தில் என்ன விதமான ஆபத்துவருமோ என்று நினைத்து, உடல் வியர்த்து, நடமாடும் பிணமாகி நலிவர், அவரால் என்ன காரியத்தைச் சாதிக்க முடியும். பதவி! பதவி! மேலும் மேலும் பதவி! என்று காவடிதூக்கிடுவோரால் என்னசெய்யமுடியும்? கிடைத்ததைக் காப்பாற்றிக்கொள்ளக்கெஞ்சிக் கூத்தாடவும், மேலால் பதவிபெற மண்டியிடவும் துரைமார்முன் தூபமிட்டுத்தாண்டவமாடவும், அதட்டிப் பேசுவோருக்குச் சிந்துபாடவும், அடுத்துக்கெடுப்போருக்கு ஆசாபாசமறிந்த "ஆகுதி" தரவும், நேர மிருக்குமே தவிர, நாடு, இனம், எனும் சொல்லை நினைக்கநேரம் எங்கிருந்து கிடைக்கும்! பணமும் பதவியும் குறிக்கோளாகக் கொண்டுவிட்டால், பணிவும் பண்புபிறக்காது! மாணவரோ, புறக்காட்சியிலே காணும்புண்போக்கத் தமது அகத்திலே அருவிபோலோடும், ஆர்வமெனும் மருந்தெடுத்திடமுடியும். எனவே தான், அம்மாணவர்களின் மன எழுச்சியைக்காணமக்குமகிழ்ச்சி-மட்டற்ற மகிழ்ச்சி பிறக்கிறது. இருள் நீங்கும், மருள் மடியும்! தீதுதொலையும், அடிமைத்தனம் அகலும், புதுவாழ்வு பிறக்கும், பொன்மலர் மணம்பெறும், என்ற நம்பிக்கை பிறக்கிறது.

கள்ளன், வெள்ளைஉள்ளங் கொண்டோரை, மெள்ள வேறுபக்கம் திருப்பி விட்டுக்கிடைத்ததைச் சுருட்டிக்கொண்டு ஓடுதல்போல, இங்கு, தர்மோபதேசம் பேசித்தரித்திரத்தை வளர்த்து, மந்திர உச்சாடனம்செய்து மதியினைத் தகைத்து தழைக்கச் செய்து, திருவிளையாடல் புகன்று தீயர்திரைமறைவிலே தின்று பொருள்கவராதலே முறையாக்கிய கூட்டத்தினர் சமுதாயக்கொடுமை ஒருபுறமும் சாதிப்பூசல் பிறிதோர்புறமும், வைதிகம் ஓர்புறமும் வீணர்வாய்வேதாந்தம் வேறோர்புறமும் இருந்துகொண்டு, வீரரைக் கோழைகளாக்கி, வாலிபரை வயோதிகராக்கி, கலையைவலையாக்கி, மக்கள்வாழ்வை வழுக்குநிலமாக்கி, கோபுரத்தைக் குட்டிச்சுவராக்கி, தொங்குவிறைத்த ஆதரித்துத்துவளும் உடலை நிராகரித்து, நிந்திப்போருக்கு வந்தனைபுரிந்து கொடுமையைத்தூவி, மடமையை நீர்பாய்ச்சி அறிவிலித்தனம் விளைந்ததும் அறுத்தெடுத்து அதனை ஆங்கிலேயனிடம் காட்டி, அவன், "ஆஹா! நன்று, நன்று! இக்கிலை இங்குள்ள மட்டும், எனக்கொரு குறையுமில்லை" என்று கூறிடக்கேட்டுக் கூத்தாடுவார். இதனைமறைத்து, மாணவர்உலகை, ஒரு வெள்ளையர் மீது ஏவி விட்டனர், ஒரு சாரார். வெப்பமிகுதியால் வெடித்துள்ள நிலத்திலே புதுவெள்ளம் வேகமாகப்புகுவதுபோல, நயவஞ்சகரின்சொல், மாணவர் மனதிலே புகுந்தது, அதன்பயனே, அக்கூட்டம்பெற்றுக்கொழுத்தது, மாணவர் உலகம் உழைத்து அலுத்தது!

இன்று! "நன்று, நன்று நமதுநாடகம் இனி நடவாது" என்று, அந்நயவஞ்சகக்கூட்டம், கூறும். திராவிடமாணவர்



களன்றே, கூடினர்! மகாமகத்தலத்திலே!! கூடிப்பேசினர். எதனை? மாநாட்டு உரைகளைப்படிமின், மீண்டும், மீண்டும் படித்துப்பாருமின். திராவிட இனம், திராவிட நாடு, ஆரியச்சூது, ஆரிய ஆணவம், என்ற உணர்ச்சி, மாணவர்களிடம், என்ன வேகத்திலே வெளிப்படுகிறது, என்பதை உணர்வோரே, இன்றைய நிலையை உணர்ந்தோராவர்.

இனத்தின் இன்றைய இழிநிலைக்கு, அவர்கள் காரணம் கேட்கின்றனர். இழிவையும் பழியையும் துடைத்துப்புதுச்சித்திரம்வரைய அவர்கள் தீட்டுகோலுடன் நிற்கின்றனர். ரோம்வரை சென்று வாணிபம் நடத்திய இனம், இன்று ஏன், பணியாக்களின் பணியாளாகி விட்டது என்று கேட்கின்றனர்! பழமுதிர்ச்சோலையாம்தமிழகம், ஏன் இன்று பயமிகுபடுகுழியாகி விட்டது என்று கேட்கின்றனர். நாடாண்ட மக்கள் இன்று நாடோடிகளான காரணம் என்ன வென்று கேட்கின்றனர். வளமிகுந்தநாட்டிலே வறுமைமிகுந்ததேன் என்று கேட்கின்றனர். வீரம்செறிந்த நாட்டிலே இன்று வீணர்மிகுந்தது எப்படி என்று கேட்கின்றனர். இமயத்திலே வெற்றிக்கொடி நாட்டிய இனத்தார், இன்று ஏன் இக்கிடப்பானேன் என்றுகேட்கின்றனர். எங்கே திராவிடரின் வரலாறு? எங்கே திராவிடவீரம்? என்னவாயிற்று திராவிட இனஒழுக்கம்? ஏன் ஆரியக்கற்பனைகள், மதமாகக், கலையாக நடமாடுகின்றன? ஏன், ஜாதிஎன்ற சொல்லறியா பூமியில், ஆயிரமுண்டிங்கு ஜாதிஎன்று கூற வேண்டி வந்தது? யார்இந்தக் கேவல நிலைக்குக், கொடுமைக்கு, மடமைக்குக், காரணம் என்றுகேட்கின்றனர்! மாணவர் மனதிலே, இக்கேள்வி எழுந்தென்றால், அது சாமான்யமானது என்று அசடரும் கசடரும் தவிர, மற்றையோர் கருதார். இக்கேள்விகளே, கொடுமைகளை ஒழிக்க உலகில் பல்வேறு இடங்களிலே தோன்றிய புரட்சிகளுக்கு, முன்னுரைகளாக இருந்தன, என்பதை உலகவரலாற்றுணர் தெரிந்தோர், உணரமுடியும். "எங்கே, எங்கே கேட்கிறான் வீரன்; என்வயல்?" ஒருகுப்பை மேட்டினைக்காட்டுகின்றனர். "எங்கே, என்சோலை" என்று கேட்கிறான், முட்புதர்கள் செறிந்த இடத்தைக் காட்டுகின்றனர். "என்மாளிகை?" என்று கேட்கிறான், சரிந்துபோன சுவரும், கொறுங்கிப்போன கூறையும் காட்டப்படுகிறது. "என்பேழை?" என்று கேட்கிறான், கைவிரிக்கின்றனர், இல்லை என்பதற்கு அறிகுறியாக. "ஆஹா! இப்படியா நேரிட்டுவிட்டது? இவ்வளவு அவதியிலே சிக்கி என் அன்னை என்ன கஷ்டமனுபவிக்கிறாளோ," என்றுதததுறுகிறான் காளை. "எங்கே என் அன்னை?" என்று கேட்கிறான், தலைவிரிகோலமாகத் தள்ளாடி நடந்து, கையில் பிச்சைப்பாத்திர மேந்தியகிழவியைக் காட்டுகிறார்கள்! என்ன செய்வான் வீரன்!!

குடந்தையில்கூடிய திராவிடமாணவர்கள், தமதுநாட்டுப்பண்டையநிலைமையை அறிந்தார்கள், இன்றைய நிலையைத்தெரிந்தார்கள், அவர்களின் மனம், நாம்மேலே கூறிய வீரனுடைய மனம்போலன்றி வேறெப்படி இருந்திருக்கமுடியும்! "எவனால் என்மனைக்கும் தாய்க்கும் இந்நிலை ஏற்பட்டது" என்று வீரன் கேட்கா திருக்கமுடியுமா, திராவிட மாணவர்களும் இதுபோலவே, எமது தாணி தாழ்ச்சியுற்றதன் காரணம் என்ன? எவரால் தாழ்ச்சியுற்றது? என்று கேட்கா திருக்கமுடியுமா? என்னபதில் கிடைத்திருக்கமுடியும்? ஆரியம் அழித்தது, உன் அழகியநாட்டை, ஆண்மையுள்ள நாட்டை, அறிவுமலர்ந்தநாட்டை, கவிதை கூத்தாடிய நாட்டை, பொன்னும் மணியும் கொழுத்திருந்தநாட்டை, என்பதன்றி வேறென்ன காரணம் காட்டமுடியும்!! இந்தப்பதில் கிடைத்ததும், திராவிடமாணவர்களின் மனம், என்னென்ன எண்ணியிருக்கும், ஆரியமே! சிந்தித்துப் பார்!! ஆங்கில ஆட்சியே! ஆழமாக யோசித்துப்பார், என்று கூறுகிறோம்.

திராவிட மாணவர்களே! நீண்டநாட்கள்கழித்து, நாட்டுப்பற்றும் இனப்பற்றும் பூத்திருக்கிறது. இது சொற்பொழிவுச் சோலையாகமட்டும் நின்றுவிடக்கூடாது, கற்பனைப்பூங்காவிலே உலவ முடியாது! இளஎழுச்சியைப் பரப்புங்கள். ஆரியத்தை அழிக்கும் ஆர்வத்தை வளருங்கள். ஜாதிபேதத்தைச் சாடுங்கள். வைதீகத்தை வீழ்த்துங்கள். கடவுள், மதம், புராணம், கலை, எனும் பல்வேறு பகட்டான போர்வையுடன், ஆரியக் கள்ளிவருவாள், அம்சதூளி காமஞ்சத்துக்கு இழுப்பாள், சாகசத்துக்குசாயாதீர், சதிகண்டுகளைக்காதீர், ஓய்வு கொண்டுஉறங்காதீர், உங்கள்நாமே, புது உலகச்சிற்பம் சமைக்கவல்லது. இன்று நீங்கள்காணும்கோரக்காட்சியினைக்கண்டு மனம்நொந்து, மருந்துவகை பல தேடினர், ஒன்றும்பலிக்கவில்லை. ஒரே ஒரு மருந்து, கடைசிமருந்து, நாட்டுப் பிரிவினை, என்பது. திராவிடநாடு திராவிடருக்கே என்பதன்றி, வேறோர் மருந்தில்லை. இதனை உணருங்கள், உறுதிகொள்ளுங்கள், உற்சாகத்தோடு உழைக்க வாருங்கள், வெற்றிநமதே!

## வைத்திய வள்ளல்!

பெரியாரின் பெரியார், ஈ. வெ. கிருஷ்ணசாமி, அவர்களுக்கு, சிதம்பரத்தில் சென்ற கிழமை நடைபெற்ற சித்தவைத்தியர் மாநாட்டிலே, வைத்திய வள்ளல் என்றபட்டமளித்தனர். பெரியாரின் பெரியார், ஏழைஎளியோருக்கு ஆற்றிவரும் சிறந்ததொண்டு நாமறிந்தது. நாடு அறிந்தது. மாநாட்டினர், அவருக்குத் தக்கதோர் பட்டம் அளித்தமைகண்டு, மகிழ்கிறோம்.



## வைசிராய்—பெரியார் சந்திப்பு.

பிப்ரவரி 22ந்தேதி பிற்பகலில் பெரியார் ஈ. வெ. இராமசாமி அவர்கள், மே. த. வைசிராய் அவர்களைக் கோவையில் கண்டுபேசினர். சர். R. K. சண்முகம் அவர்களும், வைசிராயைக்கண்டு பேசினர்.

சென்னையில், மே. த. வைசிராய் அவர்களை, குமாராஜா, ஆச்சாரியார், டாக்டர் சுப்பராயன் ஆகியோர், சந்தித்துப் பேசினர்.

பேசிப்பயன் ஒன்றும் ஏற்படவில்லை, என்று ஆச்சாரியார் கூறிவிட்டார்.

### செல்வம் நாள்.

திராவிடவீரர் சர். பன்னீர் செல்வம், நினைவுநாள் விழாவை எங்கும் சிறப்புறக்கொண்டாடுங்கள். மார்ச் திங்கள் முழுவதும், இதற்கெனச்செலவிடலாம். திராவிட இனஎழுச்சிக்குப்பாடுபட்ட தலைவரின், நினைவுக்குறி நாட்ட, செல்வம் நினைவுக்கமிட்டியார் கூறிடும் சீரிய யோசனைக்கு ஆதரவுதருங்கள்.

# நகைச்சுவை மன்னர்!

1ம் பக்கத் தொடர்ச்சி.

வேண்டுமென்பது, மற்றொன்றுகலையிலே கருத்து வேண்டுமென்பது, இந்தஇரண்டாவது உண்மையைத்தான் தோழர் சி. என். எ. அவர்கள் தமது சொற்பொழிவினால், சர். சண்முகத்தின் பேச்சால் காரமடைந்திருந்த தன்மானவாதிகளுக்கு இனியமுறையில்எடுத்துக்கூறினர்.நகைச்சுவை மன்னர்கூறிய கருத்துக்களை அப்படியேபின்பற்றி ஆமோதித்து கலைவளர, கலைஞனும், நற்கருத்தும் வளரவேண்டிய நிலையை தெளிவாகவிளக்கிய, அண்ணாத்துரை அவர்களைப்பின்பற்றித் தோழர்கள் பொன்னம்பலனார் கி. ஆ. பெ. விஸ்வநாதன், சிதம்பரம் தண்டபாணிப் பிள்ளை S. R. சுப்பிரமணியம், முதலானோர் அருமையாகப்பேசி, மக்கள் மனதிலேநல் விளைவுகளை ஏற்படுத்தினார்கள். நாட்டிற்கும் நாடகக்கலைக்குமெத்துணை தொடர்பு இருக்கவேண்டும் என்பதை அன்று பேசிய தன்மானவாதிகளால் மக்கள், கேட்டுமனச்சாந்தி பெற்றனர்.இந்தமனச்சாந்தியை, சுயமரியாதைத் தத்துவங்களை, ஆதரிப்பதின் மூலமாக, மக்களிடையே தலைவர் சர். சண்முகம் அவர்களும் முடிவுரை கூறிப்பெறவேண்டியதாயிற்று. தீர்மானங்களே மாநாட்டிலே கொண்டுவரப்படவில்லை. பலபேரிடத்திருந்து வந்துகுவிந்த அவற்றை என்ன செய்யப்போகிறார்கள் என்பதுகுறித்து மாநாட்டிலே ஒருவார்த்தைகூட கூறப்படவில்லை, என்றாலும், புதுமைக்கருத்துகளுக்கு புர்ட்சிமனப்பான்மைக்கு அன்று **மாநாட்டில் அதற்கு 99 விகிதம் மக்க**ளிடையே ஆதரவிருந்தது-மதிப்பிருந்தது என்றால், இல்லைஎன்று மறுத்துக்கூறுவோருக்கு, மறுபடியும் ஒருமாநாடுகூட்டி பரீட்சைபாருங்கள் என்று சிபார்சு செய்வதைத்தவிர வேறுஒன்றும் நாம் விளம்பப்பிரியப்படவில்லை.முடிவிலேபெரியார் வாழ்க, திராவிட நாடு திராவிடருக்கே, நாடகக்கலை வாழ்க! சர். சண்முகம் வாழ்க! என்ற பேரொலிகள், குறுகிய உள்ளம் படைத்தோர்க்கு, எப்படித் தோற்றமளித்தாலும் சரி, அதுஓர் சுயமரியாதை வாதிகளின் மாநாடு, கலையிலே சுயநலத்தை நாடுவோருக்கு, ஆணி அறைந்தமாநாடு, என்பதில் எள்ளத்தனையும் சந்தேகமில்லை.

---

## வடாற்காடு ஜில்லா போர்டு.

---

வடாற்காடு ஜில்லாபோர்டுக்கு தோழர் பக்தவத்சல நாயுடு அவர்கள் M. L. A. (அரக்கோணம்) தலைவராகவும், ஜனாப் மகமத்பாட்சா (வந்தவாசி) அவர்கள் துணைத்தலைவராகவும், தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## குடந்தை மாணவர் மாநாடு.

2-ம் பக்கத்தொடர்ச்சி.

புரிந்தார்கள். அக்கட்சியின் பணியால் இன்று நம்மவரிற் சிலர் அரசியலில் பதவிகள் பெற்றுள்ளனர். அப்பெரியோர்கள் இல்லையெனின் சம்நிலையாதாய் இருக்குமென்று எண்ணிப்பாருங்கள். திராவிட மாணவர்களாகிய நீவிர்தாம் பின்னர் அரசியலில் பார்ப்பனருடன் உயர்ந்த பதவிகளைப்பெறப் போட்டியிடப் போகின்றீர்கள். அப்போட்டியில் வெற்றியுறுதற்கு இதுபோதே நம்ஆங்கிலப் புலமையையும் தமிழ்ப் புலமையையும் பெருக்கிக்கொள்ளுங்கள். புலமையின்றிப் போட்டியில் வெற்றியுறல் எங்ஙனம் இயலும்? வெற்றி வேண்டுமேல் பட்டங்கள் வேண்டும்; பட்டம்வேண்டுமேல் படிப்பு வேண்டும்; படிப்பின்றிப் பட்டம்பெறல் யாங்ஙனம் இயலும்? ஆவேபடித்தலே நும்பணியாயிருத்தல்வேண்டும். பயிலுங்கள்! பயிலுங்கள்!! இரவும், பகலும் கல்விக்கெனஉழைத்துப் பயிலுங்கள். பயின்று பட்டம்பெற்றுப் பார்ப்பனியப் பகையைச்சாடுங்கள்! சாடுங்கள்!! (கைத்தட்டலும் பேராரவாரமும்) என உங்கட்கு அறிவுறுத்தி வேண்டிக்கொள்ளுகிறேன்.

"செந்தமிழ் செழிக்கச்
செயல் புரிந்திடுவீர்"

"இசைக்கும், I. C. S; காரியாளர்கட்கும் என்ன தொடர்பு? அரசர் அண்ணாமலைச் செட்டியாரால் எழுப்பப்பெற்ற இசைத்தமிழுணர்ச்சியை யொழித்து, தெலுங்கிசையைக்கர் நாடகசங்கீதமென்றபெயரால் தமிழ் நாட்டில் நிலைநிறுத்தப் பார்ப்பன I. C. S; காரியாளர்கள் ஒருபதின்மர் திருவையாற்றில்நிகழ்ந்த "தியாகப்பிரம்ம" உற்சவத்திற்குவந்து கலந்துநின்று செயலாற்றினர். இச்செயல் தெலுங்கிசைக் காக்கவும், தமிழிசைக் கழிவுஞ்செய்யுஞ்செயலாகலான் அவர்கள் செயலைப்பொதுக்கூட்டங்களில் கடிந்துரைத்தோர்யார்? இவர்கள் I. C. S; காரியஅலுவல்களை நிகழ்த்த அமர்த்தப் பெற்றனரா? தெலுங்கிசையை வளர்த்துத் தமிழிசையை அழித்துத் தம்சாதிக்கு அரண்செய்ய அமர்த்தப்பட்டனரா?" எனநண்பரொருவர் என்னிட முரைத்தார், அவர் செயல்குறித்து யான் என் செயவென்றேன். "இவர்கள் செயல்களையெல்லாம் நம்திராவிட மாணவர்கள் நன்கு கூர்ந்துநோக்கி, நம்மாணவருட் பலர் I. C. S; காரியாளராவதற்குமுயன்று படித்துத் தேர்ச்சியுற்று, ஆரியஆட்சி நம் திராவிட நாட்டினின்றும் அறவேயொழிவதற்கு ஆவனசெய்ய அவாவுறுகின்றேன்" எனவேண்டுகோளொன்றை விடச் சொன்னார். ஆகட்டும் செய்கின்றேனென்றேன். அவ்வுணர்ச்சிமிக்க நண்பருரையை உன்னிப்பார்க்கவேண்டுகிறேன். எதிர்காலவாழ்வு உங்களுடையது.உங்கள் செயலால் இயல், இசை, நாடகம் ஆகிய முத்தமிழும் இந்நாட்டில் செழிப்புறவேண்டும்; செழிப்புறவேண்டிச் செயலாற்றுவீராக!

திராவிடர் தேர்தல்களில் வெற்றிபெற்று மண்டிலச் சட்டசபை, நகரமன்றம், நாட்டாண்மைக் கழகம்முதலியவற்றிற்குச்செல்லுதலைவிடச் சீர்திருத்தவேலைகளைச் செய்தலேமேல்எனச் சில தலைவர்கள் எண்ணுகின்றனர். இக்கொள்கை மிகமிகத்தவறுடைய கொள்கையாகும். என்னை? மண்டிலச்சட்டசபையில் நமதுகட்சி போதியஉறுப்பினர்களை உடையதாயிருந்தால், பார்ப்பன அமைச்சர், மொழிக்கெனச்சிறைசென்று உயிர்கொடுத்தவீரன் 'நடராஜன்' கல்வியறிவின்மையால் மடிந்தானெனக் காரணம்கூறுவரோ? கண்ணோட்டமின்றி அவர் கூறியவுரைகளைக்கேட்டு அச்சபையில் அமர்திருந்த கைதூக்கும் பொம்மைகள் போன்றவர்பலரும் நகைபுரிந்திருப்பரோ? அவசரக்கோலமெனப் பார்ப்பன அமைச்சர் வாய்விட்டுச்சொல்லிய வரிகளெல்லாம் சட்டமாகி, அச்சட்டத்தின் துணைகொண்டு இந்நாட்டு மக்களிடம் வரிதண்டஇயலுமோ? பார்ப்பனர் பதவியிலுள்ளோர் உயரவும், அல்லாதார் தாழவும் ஆயசெயல்கள் நிகழ்ந்திருக்குமோ? நமது கட்சியின் பலக்குறைவாலன்றோ எதிரிகள் எண்ணியவற்றையெல்லாம் சட்டமாக்கினர். கட்டாய இந்தியைச் சட்டத்தின்மூலம் நுழைத்தனர். நம் "தாலமுத்து" "நடராசன்" ஆகிய இரு வீரர்களின் உயிரைக்கவர்ந்தனர். இச்செயல்கள்யாவும் நம்கண்முன்நிகழ்ந்த பின்னரும் யாம்தேர்தலைப் புறக்கணிக்கலாமா? (கூடாது கூடாதெனச் சிலர்) ஆட்சியுரிமை நம்கையிற் கிடைத்தால் ஆவனசெய்ய நேரம்போதாதா? துருக்கி நாட்டின்ஆட்சியுரிமையையேற்ற "அத்தாதுர்க், கமால் பாட்சா" அந்நாட்டில் பண்டுதொட்டு வழங்கிவந்த படுதாப்போடும் பழக்கத்தை அரைக்கணத்தில் ஒழித்ததை யாம் அறியவில்லையா? அந்நாட்டு மன்றத்தில் பொறிக்கப்பெற்றிருந்த "குரான்" மொழிகளை மறையச்செய்து, "கல்வியையும், கைத்தொழிலையும் கவனியுங்கள்" எனஎழுதச் செய்யவில்லையா? "உருசிய" நாட்டில் உதவாஆட்சி நிகழ்த்திய "சார்" அரசாட்சியை ஒழித்தபின் அந்நாட்டுமக்கள் தங்கட்குஏற்புடைய திட்டங்களை ஐந்து, பத்து, ஆண்டிற்கென வகுத்துக்கொண்டு ஒழுங்குறச் செயலாற்றி இன்றுஉலகம் போற்றும் முறையில் இலங்கவில்லையா? "செருமானிய" அரசியலாட்சி யுரிமையைக் கொண்டே "ஹிட்லர்" அந்நாட்டு மக்களைத்தகாத வழிகளிற்செலுத்தி ஆட்டுவிக்கும் காட்சியையாம் அறிகின்றோமன்றோ? இவையெல்லாம் நமக்கு அறிவிப்பதென்ன? முதலில் வேண்டுவது ஆட்சியுரிமையைப் பெறுவதற்கு ஏற்பனசெய்து இலங்க வேண்டுகின்றேன்.

[தொடரும்]



—: குடந்தை :—

# திராவிட மாணவர் முதல் மாவட்ட மாநாடு.

குடந்தைத் திராவிட மாணவர் முதல் மாவட்ட மாநாட்டில் 19—2—44-ல், சென்னைப் பச்சையப்பன் கல்லூரிவிரிவுரையாளர் தோழர் A. முத்தையா, M. A, அவர்கள் தலைமைவகித்துப்பேசிய முன்உரை கீழேதரப்படுகிறது:—

மாணவர்கள் இளைஞர், உணர்ச்சிமிக்கவர்கள், உயரியவாழ்க்கைக்குறிக் கோளைக் கொண்டவர்கள், செயல்ஆற்றும் திறன் உடையவர்கள். அத்தகைய மாணவர்கள் நம் நாட்டுச்சிக்கல்களை உணர்ந்து, நாட்டுக்கும் சமுகத்திற்கும் நன்மைபயக்கத்தக்க காரியங்கள் இவைஎன அறிந்து அதற்குத் தகநடப்பது இன்றியமையாததொன்றாகும்.

இங்கே திராவிட மாணவர்கட்குச் சிறப்பான கடமை ஒன்று உண்டு. அது திராவிட நாட்டின் பெருமையைப் பேணிவளர்ப்பதாகும். இந்தியக்கலை, நாகரிகம் எனப்படும் ஆரியக்கலை, நாகரிகத்தைப் பாராட்டவும், அவைகளின் சிறப்பைப் பலதேசமக்களிடையேயும் பரப்பவும், அனேகஅறிஞர்களுமநிலையங்களும் இருக்கின்றன. திராவிடத்திற்கு அத்தகைய பணிஆற்றுவோரைக்காணோம். திராவிடத்தின் சிறப்பியல்புகளை அறியாதார் கூடஇன்றும் பலர்நமது திராவிட நாட்டில் இருக்கின்றனர். எனவே மாணவர்கள்தான் திராவிட நாகரிக விளக்குப் பெருஞ்சுடர்விட்டு எரியுமாறு செய்தல் வேண்டும்.

திராவிடத்தின் சிறப்பியல்பு என்னை? விந்தியமலைக்குத் தெற்கேயுள்ள இந்நிலப்பகுதியானது, உலகத்தோற்றகாலத்திலிருந்தே நிலவிவருகிறதென்றும், இப்பகுதியிலுள்ள மக்கள் பழங்காலத்திலிருந்தே சிறந்து விளங்கியவர்களின் வழிவந்தவர்கள் என்றும் ஆராய்ச்சியாளர்கள் முடிபு கட்டியுள்ளனர். உலகநாகரிகம் இளங்குழந்தையாக இருந்தபோது அதற்குத்தொட்டிலாக இருந்தது நமது திராவிட நாடே. இக்காரணத்தால்தான் வடநாட்டுக்கும், தென்நாட்டிற்கும்இடையே பல வேறுபாடுகள் காணப்படுகின்றன. கலை, மொழி, பொருள்நிலை, உடல் அமைப்பு, பழக்கவழக்கங்கள்,இவைகளில் வடநாட்டிற்கும் தென்நாட்டிற்கும் உள்ள வேறுபாடு வெளிப்படையாகத் தெரிவதாகும். கலை, நாகரிகம் முதலியவை ஒரு மக்கட்குழுவின் உயிர்நாடிகள். அவை காக்கப்பட்டாலொழிய மக்கட்குழுசிறப்பெய்த முடியாது. ஒரு நாட்டின் ஒவ்வொருபகுதியும், சமுகமும் முன்னேறினால்தான் அந்நாடு சிறப்படையும், பல நாடுகளும் முன்னேறினால் தான்உலகம் செவ்வையாய் நடக்கும்.

எனவே, தம்து சமூகமும்நாடும் முன்னேறுவதற்குப் பாடுபடுவது திராவிட மாணவர் கடமை. முதலாவதாகத் திராவிடமொழிகளின் முதன்மொழியாகிய தமிழ்மொழியின் தூய்மையையும், சிறப்பையும் காப்பது அவசியம் என்பதை நம் மாணவர் உணரவேண்டும். தெலுங்கு மலையாளம், கன்னடம், துளு ஆகிய மொழிகள் திராவிடமொழிகளே. அவைகளை வடமொழி விழுங்கிக் கொண்டு வருகிறது. அதனால் அம்மொழிகளை வடமொழிப்பகைவனிடமிருந்து காத்து, அவைசிறப்புற்றோங்க, மிகவும்பாடுபடவேண்டும். தமிழின் தொன்மையையும் தூய்மையையும் பாழ்படுத்த முற்பட்டிருக்கின்றனர் சிலர். அவர்கள் தமிழுக்கு ஊறுசெய்யாசவாறுதடுத்துத், தமிழிசையைப்போற்றிப் பெருக்கவேண்டும்.

இரண்டாவதாகத் திராவிட சமுகத்தைச் சிறப்படையச் செய்தல் வேண்டும். திராவிட சமுகத்தைச் சாதிபேதமாகிய ஆரியத்தொழுநோய் பீடித்து வாட்டுகிறது. திராவிடருக்குச் சாதிபேதம் கிடையாது. திராவிடரிடையே பிறப்பினால் உயர்வுதாழ்வு கிடையாது. திராவிடரிடையேமதக்கோட்பாடுகளால் மாறுபாடு கிடையாது. இப்போது காணப்படும் சமுகவேற்றுமைகள் ஆரியரின் கூட்டுறவால் விளைந்தவை, புதிதாக வந்துள்ள சாதிபேதநோயை அகற்றினால் திராவிடச்சமுகம் வலுப்பெற்றுச் சிறப்புறும், மக்களின் வாழ்க்கை நலங்கள் பெருகும்.

மூன்றாவதாகப் பொருளாதார உயர்வு திராவிடநாட்டிற்குத்தேவை. சுமார் நூறு ஆண்டுகட்கு முன்புவரையில்கூட தென்னாடு பொருள்சிறப்புப் பெற்றிருந்தது. மிகப்பழங்காலத்திலிருந்தே பணங்கொழித்திருந்தது. பல நாடுகளுடன் பெருத்தவாணிபம்செய்து விளங்கியது. ரோமர் முதலியோர் தமது நாகரிகஉச்சநிலையில்கூட நம்மைத்தேடிவரும் சிறப்புடன் விளங்கியது திராவிடநாடு. கடந்த 40, 50 ஆண்டுகளாக வடநாட்டின் பொருளாதாரநிலைமிகவிரைவாகஉயர்ந்து வருகிறது, சமீபகாலத்தில் உண்டான பெரியஆலைத்தொழில்கள் எல்லாம் வடநாட்டில் தோன்றுகின்றன. இத்தகைய இந்தியப்பொருளாதாரவளர்ச்சியில் திராவிட நாட்டிற்குத்தக்க பங்குகிடைக்கவில்லை. திராவிடத்தில் பலவகை மூலப்பொருள்களும் கிடைக்கின்றன. அவைகளைப் பயன்படுத்திப்பல ஆலைத்தொழில்களையும் வளர்க்கவேண்டும். அப்போதுதான் திராவிடநாட்டின் பொருள் வளம் பெருகும். பொருள்வளம் சிறந்தால்தான் மக்களின் வாழ்க்கை நலமும் பெருகும்.

நான்காவதாகத் திராவிடக்கலையையும் வாழ்க்கை முறைகளையும் உலகுக்கு எடுத்துக்காட்டி, நம் வாழ்க்கையிலும் அவைகளைப் பயன்படுத்திக்கொள்ளவேண்டும். திராவிடக்கட்டிடக்கலை, படக்கலை, சிலைக்கலை முதலியவை மிகச்சிறப்பானவை எனஅறிஞர் பாராட்டுகின்றனர். திராவிடக் கட்டிடக்கலை முதலியவைகளின் சிறப்புக்குத் தென்னாட்டுக் கோயில்களும், கிழக்கிந்தியத் தீவுகள் முதலிய வெளியிடங்களில் தமிழரால் கட்டப்பட்ட கோயில்களும் சான்றுகளாகும். அக்காலத்தில் தமக்கு எது சிறந்ததெனத் தோன்றியதோ அதற்குத் தம்கலை அறிவைப் பயன்படுத்தினர் அக்காலமக்கள். அக்கலையை இக்காலத்தில் பலருக்கும் பயன்படும்படி செய்வதோடு, புதிய முறையில் அதனை வளர்ப்பதும் நமது கடமையாகும். பலசெடி, கொடிகளின் வேர், வித்து, இலைமுதலியவைகளைக் கொண்டு அரியமருந்துகளைச் செய்தனர் தென்னாட்டுச்சித்தர்கள். அதுவே சித்த வைத்தியம் எனப்படுவது.இந்தமருத்துவ முறைகளிற் பல ஒருசிலரால் அங்கங்கே கையாளப்பட்டு வரப்படுகின்றன. பல ஏடுகள் ஆங்காங்கு செல்லரித்து அழிகின்றன. குறைந்த செலவில் மிகுந்த பலனைத்தரும் சித்தமுறையைப் பாராட்டி வளர்க்கவேண்டும். தமிழ் நாட்டினரின் வாழ்க்கைக்கோட்பாடுகளையும் எங்கும் பரப்பவேண்டும். மிகப்பழைய காலத்திலேயே கற்பின் சிறப்பை உலகறியச் செய்தது தென்நாடே! அன்பு, கொடை வள்ளற்றன்மை, வீரம், பெண்மை-இவைகட்கு உறைவிடமாக விளங்கியது திராவிடநாடே! ஆரிய, ஆங்கிலேயக் கூட்டுறவால் திராவிடர் சிறிது நிலைகுலைந்திருக்கின்றனர். திராவிட இளைஞர் வீறுகொண்டுஎழுந்து, திராவிடநாடு எல்லாவகையாலும் பெருஞ்சிறப்பு அடையுமாறுசெய்யவேண்டும். திராவிட நாட்டின் சிறப்பான அணிகலன்களாகிய மொழி, கலை, சமுகம், கோட்பாடுகள், பொருள்நிலை இவைகளை உலகெங்கும் ஒளிவீசும்படிசெய்யவேண்டும். திராவிட நாட்டின் சிறப்புகள் ஓங்கும்படி செய்வதே திராவிடமாணவரின் கடன்.

---

## பழயகாலமோ!

மீண்டும் ஜெர்மானியர், லண்டன்மீது வெடிகுண்டு வீசுகின்றனர். சேதம் அதிகம். சோர்வோ ஏற்படவில்லை. ஜெர்மன் நகர்களைப் பிரிட்டிஷ் அமெரிக்க விமானங்கள் தவிடுபொடியாக்கிவருகின்றன. மிஸ்டர் சர்ச்சில், ஜெர்மன் விமானங்கள், லண்டனைத்தாக்கியதைக்கண்டு மறுபடி பழயகாலம் வருகிறதுபோலும்! என்று புன்சிரிப்புடன் கூறினாராம். பார்லிமெண்டில் பேசுகையில், மிஸ்டர் சர்ச்சில், யுத்தநிலையைவிளக்கிவிட்டு, ஜெர்மன்மீது விமானத்தாக்குதல் ஓய்வின்றி நடைபெறும் என்று எடுத்துரைத்திருக்கிறார்.

# தமிழரின் பொருள் முன்னேற்றம்!

(அ. முத்தையா M. A.)

## தலைவர் முடிவுரை.

மிகப் பழங்காலந்தொட்டே எல்லாச் சிறப்புகளுடனும் விளங்கியது தமிழ்நாடு. நீர்வளம், நிலவளம், பொருள் வளம்முதலியவை பெற்றநாடு. பலநூற்றாண்டுகளுக்கு முன்னிருந்தே பல தேசங்களுடனேயும் பெருத்தவாணிபம் செய்து பொருள் பெருக்கியநாடு. சுமார் நூறு ஆண்டுகட்கு முன்வரையில்கூடச்செல்வச் செழிப்புடன் விளங்கிய நாடு.

ரோமர், யவனர் முதலியோர் வியாபாரத்திற்காகத் தென்னாட்டிற்குத்தான் வந்தனர். போர்ச்சுகீசியர், பிரஞ்சுக்காரர், ஆங்கிலேயர் முதலியோர் இப்பகுதியில் தான்அதிகஇலாபம்பெற்றனர். இத்தென்நாடு கடந்த சுமார் நூறுஆண்டுகளில் தான் பொருள் நிலையில் சீர்கெட்டுவிட்டதென்பது குறிப்பிடத்தக்கது.

தென்னாட்டிலே விவசாயம், கைத்தொழில்கள், வாணிபம் முதலியவை சிறப்புற்றிருந்தன. காவிரிப்பூம்பட்டினம் கொற்கை முதலிய துறைமுகங்களிலிருந்துபலவகைப்பொருள்களும் ஏற்றுமதி செய்யப்பட்டன. பலபொருள்கள் இறக்கப்பட்டன. இப்போதுள்ள நிலைமை போல், பெரும்பாலானமக்கள் உழவையே நம்பி இருக்கும் கேவலமான நிலைமை சுமார் நூறுஆண்டுகட்கு முன்பு இல்லை. விவசாயமும், தொழில் துறைகளும் மேலான நிலையில் இருந்தன. மக்கள் பலவகைக் கைத்தொழில்களாலும் பொருள் திரட்டினர். வாணிபத்தில் பொருள் ஈட்டினர். கப்பல் வியாபாரத்தால் பணம் தேடினர். தமிழரே கப்பல்களைக் கட்டினர்-ஓட்டினர். தமிழ்நாட்டுத் துறைமுகங்களில் காணப்பட்ட கப்பல்களில் பெரும்பாலானவை தமிழ்நாட்டு மரக்கலங்களே. இங்கிலாந்து முதலிய நாடுகளில் இரும்பு எஃகு, முதலிய பொருள்களால் கப்பல்களைக்கட்டத்தொடங்கிப்பின் நீராவியால் அவைகளை இயக்கத்தொடங்கிய பிறகுதான் தமிழ்நாட்டுப் பாய்கட்டி மரக்கலங்கள் போட்டிமிகுதியால் அழிந்தன. கப்பற்றொழிலே இருந்தவிடம் தெரியாமற் போய்விட்டது.

அதேபோல மிகச்சிறந்து விளங்கிய கைத்தொழில்கள் மேல்நாட்டுத்தொழிற்சாலைகளின் போட்டியால் அழிந்தன. பருத்தித்தொழில் தமிழ்நாட்டின் பல பகுதிகளிலும் சிறந்துவிளங்கியது. கிழக்கிந்திய கம்பெனியார் சென்னைத்துறைமுகத்திலிருந்து ஏராளமான பருத்தி ஆடைகளை ஏற்றிச் சென்றனர். அவைகளை ஐரோப்பிய நாடுகளில்விற்றுபெரும் பணம் திரட்டினர். தஞ்சை ஜில்லாவில் கும்பகோணம், கூறைநாடு, அய்யம்பேட்டை முதலிய இடங்களிலும், தென் ஆற்காடு ஜில்லாவில் புவனகிரி, சிதம்பரம் முதலிய இடங்களிலும், கோயமுத்தூர் ஜில்லாவில் கொள்ளேகாலம் முதலிய இடங்களிலும் உயர்ந்த பட்டாடைகள் நெய்யப்பட்டன. இப்போதும் அந்த இடங்களிலும் அத்தொழில் ஓரளவிருப்பினும் அது செழிப்பாக இல்லை. அந்நகரங்களிலும் நெசவாளிகளின் நிலைமிகவும் ஏழ்மையானதாகவே இருக்கிறது. கூட்டுறவுமுறைகளாலும், வேறு வகைகளாலும் நெசவுத்தொழில் புத்துயிர் பெறும்படி செய்யவேண்டும்.

மேலும் பல தொழில்களும் தமிழ்நாட்டில் சிறந்துவிளங்கின. காகிதம்செய்தல். இரும்புவேலை, பலஉலோகங்களிலும் பல பாண்டங்களைச் செய்தல், சமுக்காளம் நெய்தல், முதலிய பலதொழில்களும் ஒவ்வொரு ஜில்லாவிலும் விளங்கின. அத்தொழில்கள் வெளிநாட்டு ஆலைத்தொழில்களின் போட்டியால் அழிந்துவிட்டன, அல்லது இந்நாட்டினர் செய்த தொழில் ஆங்கிலேயர் கைக்குப்போய் விட்டன, உதாரணமாக புதியமுறையிலே பெருந்தொழிலாகச் சுருட்டுத்தொழிலை 1850 ஆண்டிலே மெசர்ஸ் குப்புசாமி நாயுடு கம்பெனியார் தொடங்கினர். 1890 ஆண்டில் ஸ்பென்சர் அண்டு கம்பெனியார் அத்தொழிலைப் பிடித்துக் கொண்டனர். அந்தந்த இடத்திற்கு வேண்டிய அளவு சர்க்கரை அங்கங்கே உண்டாக்கப்பட்டது. ஆனால் இப்போது சர்க்கரை உற்பத்தித் தொழிலில் தென்னாட்டில் மிகமுக்கியமானது பேரி கம்பெனி.

கடந்த 30, 40 ஆண்டுகளாக வடநாட்டில் ஆலைத்தொழில் பெருகிவருகிறது. தென்னாடோ உயரவில்லை. கோயம்புத்தூரிலும் அதையடுத்த சில இடங்களிலும் பஞ்சாலைத்தொழில் விருத்திஅடைவது மகிழ்ச்சியைத்தருகிறது. ஆனால்வேறுபல தொழில்களும் வளராததைக்காண வருத்தம் உண்டாகிறது. ஆண்டுதோறும்தென்னாட்டிலிருந்து பலவகை மூலப்பொருள்கள் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. அவைகளை இந்நாட்டிலேயே பயன்படுத்தித்தொழில்களை விருத்திசெய்தால் செல்வம் சிறக்குமே! நம்தமிழ்நாட்டின் செல்வச்சிறப்பைத்தேடாதது நமது குறை.

தென்னாற்காடு ஜில்லா முதலிய மணிலாக்கொட்டையை அதிகமாக விளைவிக்கிற பகுதிகளிலே பெரியசோப்புத்தொழிலை நிறுவலாம். அங்கங்கே சிலவூர்களில், சிக்கனமல்லாத முறையில், சோப்புசெய்யப்படுகிறது. அது நிலைக்காது. புதியவசதிகளைக்கொண்டு பெரிய ஆலைத்தொழிலாக அது நடத்தப்படவேண்டும். நிலக்கடலையைக்கொண்டு பிஸ்கட்முதலிய உணவுப்பொருள்களைச் செய்யும் தொழில்களும் வளர்வதற்குஇடமிருக்கிறது.

கப்பற்றொழில் மறுபடியும் நம்கைக்கு வரும்படி செய்யப்பெருமுயற்சி எடுத்தல் வேண்டும். அத்தொழில் நம்மவர்கையில் இருந்தால் பலர் பிழைக்கவழி உண்டாகும். விவசாயநாடாகிய நமது நாட்டிலே தயிர், பால், நெய், வெண்ணெய் இவைகள் சரியாகக்கிடைக்கவில்லை என்பது வருத்தத்தைத்தருகிறது. ஆடு மாடுகளை வளர்த்தலை இலாபம்தரும் ஒரு தொழிலாகக்கொண்டு, அதில்சிலர் பொருள் ஈட்டவேண்டும். இராமநாதபுரம்ஜில்லா முதலிய ஆடுமாடுகள் வளர்க்கவசதியுள்ள ஜில்லாக்களிலுள்ளவர்கள் இத்தொழிலில் ஈடுபடவேண்டும். பருத்தி, பட்டு நெசவுத் தொழிலுக்குப் புதிய முறைகளால் புத்துயிர் அளிக்கவேண்டும். தஞ்சை முதலிய ஜில்லாக்களில் தேங்காய் உரிமட்டை பாழாக்கப்படுகிறது. அம்மட்டைகள் கயிறு, மிதியடி, பாய் முதலியவைகளைச் செய்ய உபயோகப்படுத்தப்படலாம். வேலூருக்கருகில் காகிதப்பட்டடை, மன்னார்குடி முதலியஇடங்களில் காகிதம் செய்யப்பட்டது. இப்போதுகிடைக்கும் மூலப்பொருள்களைக்கொண்டு காட்டைச்சார்ந்த இடங்களில் காகிதஆலைகளைத்தோற்றுவிக்கலாம்.

தமிழ்நாடு பழையநாடு. அதில்பலசுரங்கப் பொருள்கள் இருத்தல்வேண்டும். அவைகளைப்பற்றிய அறிஞர்குழு ஒன்று ஆராயவேண்டும். தமிழ் நாட்டிலுள்ள சுரங்கப்பொருள்கள் தோண்டிஎடுக்கப்பட்டால் பொருள் முன்னேற்றம் விரைவில் பெறப்படும்.

தமிழ்நாட்டிலேவழிவழிவந்த தொழில் அறிவு இருக்கிறது. உழைக்கத் தொழிலாளிகள் அநேகர் இருக்கின்றனர். உற்பத்திசெய்த பொருள்களைவாங்க ஒரு பெரிய நிலப்பகுதி இருக்கிறது. தொழில்களைத்தொடங்க முதலாளிகளும் முதலும் இல்லாமற்போகவில்லை. நாம் இந்தியாவிலும், உலகிலும் சிறப்பிடம் பெறவேண்டுமானால், தமிழ் மக்கள் இன்பமாகவாழவேண்டுமானால், தமிழ் நாட்டு பொருள் வளர்ச்சிக்காக ஒவ்வொரு தமிழனும் உழைத்தல் மிகமிக அவசியம்.

Edited Printed and Published by C. N. Annadurai M. A., at "Dravida Nadu" Press, 51-Chairman, Sambasiva Chettiar Street, L. Conjeeveram.

